உ
சிவமயம்

# இருமணி (சத்தும் சதசத்தும்)

**ஜெ.யெம். நல்லசாமி பிள்ளை, B.A., B.L.,**

**"எவ்வெவர் தன்மையும் தன்வயிற் படுத்தும்
தானேயாகிய தயாபரன் எம்மிறை."**

முன்வாசகத்தில் (கடவுளும் உலகும்) குறித்துள்ள இரண்டு திருமந்திரங்களின் பொருளை விளக்கப் புகுவாம். இவ்விருமந்திரங்களும் ஒருவாறு ஒன்றாகத் தோற்றுவதால், யூகித்துணராவிடின், அவைகளின் பொருள் கெட்டுவிடும்.

**பொன்னை மறைத்தது பொன்னணி பூஷணம்
பொன்னின் மறைந்தது பொன்னணி பூஷணம்
தன்னை மறைத்தது தன் கரணங்களாம்
தன்னின் மறைந்தது தன் கரணங்களே.**

**மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூதமே.**

இம்மந்திரங்கள் உயிரின் பந்தமோட்ச நிலைகளை யுணர்த்தி, அது தத்துவ தரிசனம், ஆத்மதரிசனம், சிவதரிசனம் ஆகிய முத்தியேணியில் ஏறிச்செல்வதை விளக்கும். முதன் மந்திரத்தில் பார்ப்பவன் கண்ணுக்குப் புலப்படுவது ஒரு பொன் அணி. இதில் இருவகைக் காட்சியுளது. அதைப் பொன்னாகவாவது அல்லது அணியாகவாவது நோக்கலாம். பொன்னாக நோக்குங்கால், அதன் நிறம், மாற்று, இடை முதலியவை முன்னுக்கு முனைத்து நிற்கும். அப்பொழுது அது அணியென நமக்குத் தோற்றாது. அது போலவே, அதை அணியாக நோக்குங்கால் அது காதணியோ, கழுத்தணியோ, கையணியோ, கால் அணியோ வென்பவன முனைத்து நின்று அது இன்னவிதமான பொன் என மனத்தில் வராது. ஆயின் இவ்விருதக்காட்சி நிகழும் காலத்திலும், பொன்னாவது, அணியாவது, பார்ப்பவனாவது உளதாகாமற் போகவில்லை. அவைகளை மித்தையென்றும் பொய்யென்றும் சொல்லுவதற்கிடமில்லை, அவசியமுமில்லை. பொருள் ஒன்றாயிருந்தும் காட்சி பேதத்தால் வேறாகின்றதன்றி நாம் எவ்விதத்தினும் மருண்டதில்லை. ஒரு பொருள் இருகாட்சியுடைத்தாயிருப்பதில், நம்முடைய மனமும் ஒரு காட்சியினின்றும் மற்றொரு காட்சிக்கு மாறும் இயல்புடையதாயிருக்கின்றது. இவ்விருகாட்சியினும் பயனுண்டு. ஒருவன் ஒரு நகை வாங்க வேண்டுமென்று ஒரு நகை வியாபாரொயின் கடைக்குச் சென்று நகையைப் பரிட்சிக்குங்கால் அவன், பொன்னும், நகையும் நாம ரூபமாத்திரந்தானே, அவையெல்லாம் மித்தைதானே யென்று திடங்கொண்டு பேரம் செய்வானானால் அவன் மோசம் போகானே! ஒருவன்

# இருமணி (சத்தும் சதசத்தும்)

தனக்கு என்ன மாற்றுத்தங்கத்தில் என்ன நகை வேண்டுமென்று நிச்சயஞ் செய்து கொண்டு, வியாபாரி கொடுக்கும் நகை தான் கோரும் மாற்றிலிருக்கிறதாவென்று பார்த்து, பார்த்து, பிறகு தனக்குப் பிடித்தமான நகையா வென்றும் சோதிப்பான். இவ்வுதாரணத்தை மேற்கொண்டு, திருமூலநாயனாரும், உயிர்க்கும் உடலுக்கும் (Subject and Object) உள்ள இயைபினை உணர்த்தப்புகுந்தார். 'தன்' என்னும் பதம் உயிர், சீவன், பசு, ஆன்மா என்னும் பரியாயபதங்களால் உணர்த்தப்படும் புருஷனை உணர்த்தி நின்றது. 'தன்கரணங்களாம்' என்றதனாலும் இதன் பொருள் மேலும் நிலையுறுத்தப்பட்டது. அப்படிக்கன்றி 'தன்' என்னும் மொழி மாயாவாதிகள் கூறுவது போல் பரம்பொருளை யுணர்த்ததாது. 'தன் கரணங்களுக்கு' மேல் நின்றது அவர்கள் மதப்படி பரமானதால் அவர்களும் இப்பொருள் கூறி இடர்ப்பட்டார்கள். இப்படித் தப்பர்த்தம் செய்யக்கூடுமென்று எண்ணியே, நம் நாயனாரும், "மரத்தை மறைத்தது" என்று எடுத்துப் பின்னும் அருளிச் செய்தார். 'உயிர் உடல்' (Mind and Body) என்ற முன்னொரு வியாசத்தில், நம் நாயனார் கருத்தின்படி இவற்றிற்குள்ள சம்பந்தம் இன்னதென விளக்கினாம். அதுவும், உயிர் உடலுக்கு இதம் தரக்கூடிய பொருளையிம் செயலையும் நாடி அவ்வுடலுக்கே உழைத்து உலகோடு விஷயீகரித்து நிற்கையில், தன் உயிரும் உலகோடொன்றாகி, தான் கெட்டு நிற்கின்றான், மறைந்து கிடக்கின்றான். நம் நாயனாரின் சொற்கூற்றைக் கவனிக்க ஒவ்வொரு சமயமும், இதுவெல்லாம் மித்தை மித்தை யென்று மொழியவில்லை. 'மறைத்தது' 'மறைந்தது' என்றே மொழிந்தார். உயிராவது உடலுலகாவது மித்தையன்று, பொய்யன்று. உயிர் உடலோடு ஒற்றி விஷயீகரித்து நின்ற போது (Objective condition) உயிர் உடலினால் (Object) மறைக்கப்பட்டது. உயிரும் உலகை மறைத்து உலகோடு ஒற்றி நில்லாத போது, உலகு மித்தையானதில்லை. உயிரில் மறைந்தே நின்றது. இழந்து நின்றது. சில மந்தமதிகள் இவையெல்லாம் சொல்வாத மென்பர்கள். ஆயின், ஒவ்வொரு மொழியும் ஒரே பொருளில் உபயோகிக்க வேண்டுமென்னும் தர்க்க நியாயத்தைக் கைப்பற்றி, ஒவ்வொரு மொழியையும் சரியாகப் பிரயோகிக்க வேண்டியது அவசியமன்றோ? இவ்விதமாக மொழிகளைச் சரியான பொருளில் உபயோகப்படுத்தாமல் மயக்கம் கொள்ளும்படி கூறுவதனாலன்றோ அநேக துர்விவாதங்களும் தலையெடுத்தன. இது நிற்க. இவ்விதமாக உயிர் உடலோடு ஒற்றி மறைந்து கிடக்கும் நிலைக்கு அதன் பந்த நிலை அல்லது பாச பசு நிலை யென்று பேர். உயிரை மறைத்து நிற்பதற்குப் பந்தமென்றும் பாசமென்றும் மலமென்றும் அவித்தை யென்றும் பேர். தன்னையும் உலகையும் வேறுபடுத்தி, இவ்விரண்டின் உண்மைச் சொரூபத்தை உணர்ந்து, தான் உலகல்ல வென்று தன் சொரூபத்தில் நிலைக்கும் போது, உயிர் தத்துவ தரிசனத்தையும் ஆன்மதரிசனத்தையும் அடைந்ததாகும். (இவைகளின் விவரங்களை உண்மை நெறி விளக்கத்திலும், சித்தாந்தத்தில் வெளி வந்த 'திரிபதார்த்த தசகாரியத்திலும்' பார்க்கவும்). இவ்வுண்மையுணர்வினால், உண்மை நீதிபோதம் (Ethics) முற்றும் விரிக்கின்றது. ஒருவன், உலகாசையில் முழுகி நிற்கவும், தன் அறிவு இச்சையெல்லாம் மழுங்கி, தீயசெயல்களைச் செய்து, துன்பத்தில் ஆழ்கிறான். இவ்வுலகப் பற்றினின்றும் விடுபடவும், தானும் துயரினின்று விடுபட்டு, தன் மேலான குணங்களையும், அறிவையும் விளக்கிப் பழக்கத்தினால், ஆன்மசுத்தி அடைகிறான். இவ்விதமாவது, உயிரின் ஒரு முக்கிய தன்மையாகிய அதுவது ஆதல் தன்மையால் உண்டாகியதென்று முன் வியாசத்திலேயே விரித்துள்ளோம். நாம்

கண்ட மட்டும், இவ்விரிவும், சைவசித்தாந்த நூல்களிற் கண்டதன்றி, மற்றெந்த மதவாதிகள் நூல்களிலும் விரிக்கக் கண்டிலேம். இத்தன்மையினால், இது சத்தும், அசத்தும் ஆகாமல் நடுவே நின்று சதசத்தென்று பேர் பெறுகின்றது.

இத்தன்மையை, ஆணும் பெண்ணும் அல்லாத அலியென்று ஆன்மாவை "ஒழிவிலொடுக்கம்" என்னும் அரிய நூலில் கண்ணுடைய வள்ளலார் கூறுகின்றார். அலியெனினும், அதன் பாலைக் கூறும் போது, ஆணுறுப்பு மிகுந்தால் ஆணாகும், பெண்ணுறுப்பு மிகுந்தால் பெண்ணாகுமென்று தமிழ் இலக்கணம் கூறும். ஆகையால், அலியாகிய ஒருவள் 'அவன்' என்றாவது 'அவள்' என்றாவது அழைக்கப்படுமன்றி, 'அது' என அழைக்கப்படான். அது போலவே, உயிரும், அசத்தாகவாவது, சத்தாகவாவது நிலை பெற்று வாழுமன்றி, தனித்து வாழாது. அதாவது, இவ்விரு பொருளுடன் பற்றி நில்லாது தானாகத் தனித்து நில்லாது. கடவுளாவது உலகமாவது இல்லாவிடில், உயிர் என்ற ப்ரு பொருளே இருக்க மாட்டாது. ஆகையினால் நம் மெய்கண்டநாதனும் இந்நிலையை இரண்டு உதாரண முகத்தால் விளக்குகின்றார். அவையாவன ஊசலும் (ஊஞ்சல்) சிறைசெய் நீருமாம். ஊஞ்சல் கயிற்றினால் ஒன்றில் கட்டியிருக்க வேண்டும். வடம் அற்றால் பூமியில் தான் விழவேண்டும். ஆகாயத்தில் தனித்து நில்லாது. ஒரு ஏரியில் கட்டுண்ட நீரும், கரையுடைந்த வழி அங்கு நில்லாது வேறு புலத்து விரைந்து செல்லும். முற்கூறிய உதாரணத்தை முன்னிட்டு நம் நாதர் 'அத்திப்பழம் ஏன் கீழே விழுகின்றது' என்னும் கேள்வியின் பொருளை உணர்ந்திருந்தாரென்று வெளியாகிறது. மரத்தின் பலத்தால் தாங்கப் பெற்று அதன் ஆதரவால் ஊஞ்சல் மேல் நின்றது. அதன் வலிவு குன்றியவழி, இன்னொரு சத்தியால், பூமியின் ஆகருஷண சக்தி (Force of Gravity) யால் இழுக்கப்பட்டு பூமியில் சேருகின்றது. இவ்விரண்டு சக்தியின் ஊஞ்சல் இடைப்பட்டு நின்றது. பூமியின் அபாரசத்தியால் இழுக்கப்பட்டும், மரத்துடன் கொஞ்ச காலம் சேர்ந்து நின்றது கொஞ்ச காலம் மட்டுந்தான், மரத்தின் கொம்பில் பழம் பழுத்தவுடன் கொம்பு எவ்வளவு இழுத்தாலும் பழம் நில்லாது, மண்ணுடன் சேர்ந்து மண்ணாய்விடும். அற்றதும் பூமியைப்பற்றியதும் ஒரே சமயம். அது போலவே பாசங் கழன்றால் பசுவுக்கிடம்பதியாம்.